4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண். எம். 8798.

## கேரள மார்க்சிஸ்ட் தலைவர் மறைவு

கண்ணனூர். ஜுலை 3—
மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் கேரள மாநிலத் தலைவர்களில் ஒருவரும் சட்டமன்ற உறுப்பினருமான தோழர் குன்ஹாம்பு நேற்று பிற்பகலில் கன்ஹான் காட் என்ற இடத்தில் மாரடைப்பால் காலமானார்.

65 வயதான இவர் 1965 முதல் கேரள அசெம்பிளியில் உறுப்பினராக இருந்துவந்தார்.

இவர் பத்திரிகையாளரும் அரசியல் தலைவரும் சமூகத் தொண்டருமாவார்.

மறைந்த தோழருக்கு ஏராளமான தலைவர்களும் தோழர்களும் அஞ்சலி செலுத்தினர்.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10) மதுரை 4-7-72 செவ்வாய் (மலர் 156



# 2 இலட்சம் பேர் அணிவகுப்பு

## வரலாறுபடைத்த மார்க்சிஸ்ட் கட்சி மாநாட்டின் கடைசி நாள் உணர்ச்சிமிகு காட்சிகள்

மதுரை, ஜுலை. 3—

இதுபோல் மதுரையில் பார்த்ததே இல்லையே என்று மாற்றாரும் நடுநிலையாளரும் போற்றி வியந்த,

தமிழக அரசியல் இயக்க வரலாற்றிலேயே கண்டிராத, வேறு எந்த அரசியல் கட்சிகளாலும், மக்கள் அணிவகுப்பு ஆர்ப்பாட்டம் என்ற முறையில் திரட்டிட முடியாத, ஒழுங்கும் பண்பும், உறுதியும் கட்டுப்பாடும் நிறைந்த

எண்ணற்ற உரிமைப் போராட்டங்களிலே போராடி தியாகத்தழும்பேறிய —வீரநடை போட்டு காங்கிரஸ் ஆட்சியின் அக்கிரமங்களையும்; அடக்குமுறைகளையும் எதிர்த்து— இந்திராகாந்தியின் அரை பாசிச அடக்குமுறையையும் முறியடிப்போம் என்ற முழக்கங்களுடன்

இரண்டு லட்சம் பேர் ஆண்களும், பெண்களும், குழந்தைகளும், தொழிலாளர், விவசாயிகள், மாணவர்கள், நடுத்தர வர்க்க ஊழியர்களும் அணிவகுத்து வந்த காட்சியை மதுரை மாநகர மக்கள் என்றைக்கும் மறக்க மாட்டார்கள்.

மகத்தான நிகழ்ச்சி—வரலாற்றுச் சிறப்புமிக்க ஒரு நிகழ்ச்சி மார்க்சிஸ்ட் கட்சியின் 9-வது மாநாடு.

கடல்மடை திறந்த என்று ஐயுறும் வண்ணம் ததோ, காட்டாற்று மக்கள் வெள்ளம் திரண்ட வெள்ளம் புகுந்ததோ காட்சியை மதுரை மாநகரில் ஊர்வலம் சென்ற 7 மைல் தூரம் முழுவதிலுமுள்ள தெருக்களின் இருமருகிலும் லட்சோப லட்சம் மக்கள் நின்றுவாழ்த்திவரவேற்றனர் ஓரிடத்தை ஊர்வலம் கடந்து செல்ல இரண்டரைமணி நேரம் பிடித்தது என்றால் அதன் பிரும்மாண்டமான எண்ணிக்கையை இதைப் பார்க்காதவர்கள் யூகித்துக் கொள்ளலாம்.

மாட்டு வண்டிகளில் பெண்கள், குழந்தைகள்

ஊர்வலத்தின் முகப்பில் யானை செங்கொடி தாங்கி முன்செல்ல — அதன் பின் குதிரைவீரர் கொடியேந்திச் செல்ல—மயிலாட்டம், ஒயிலாட்ட வீரர்கள் ஆர்ப்பரித்து முன்னேற! ஆயிரக்கணக்கான வாலிபர்கள் இளைஞர்கள், தோழர்களும் அவர்களைச் சூழ்ந்துசெல்ல- மாநாட்டிற்கு இந்தியாவெங்கிலுமிருந்துவந்தபிரதி

(4-ம் பக்கம் பார்க்க)

## தோழர் பி. சுந்தரய்யா மீண்டும் பொதுச்செயலாளர்

மதுரை, ஜுலை. 3—
இங்கு நடைபெற்ற மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கடசிமாநாட்டின் 5-வது நாளான ஜுலை 1-ந்தேதி மாலையில் புதிய மத்தியக் குழு ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

இந்த மத்தியக் குழுவில் ஏற்கனவே உள்ள 28 தோழர்களுடன் புதிதாக தோழர்கள் கிருஷ்ணபாத கோஷ் (மே. வங்கம்), நிருபன்சக்ரவர்த்தி (திரிபுரா), இ. பாலானந்தன் (கேரளா) ஆகியோரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.



நேற்று காலையில் புதிய மத்தியக் குழுவின் கூட்டம் நடந்தது. அக்கூட்டம் கட்சியின் அரசியல்தலைமைக் குழு (பொலிட்பீரோ) வையும் பொது செயலாளரையும் தேர்ந்தெடுத்தது.

பழைய பொலிட்பீரோ உறுப்பினர்கள் 9 பேரும் மீண்டும் புதிய பொலிட்பீரோவுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

கட்சியின் பொதுச் செயலாளராக தோழர் பி. சுந்தரய்யா தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் ஜுலை 12-ல் ஆர்ப்பாட்டம்

### மார்க்சிஸ்ட் தமிழ்மாநிலக் குழு அறைகூவல்

மதுரை, ஜுலை. 1—

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) யின் தமிழ் மாநிலக்குழு விவசாயத் தொழிலாளர்கள், ஏழை நடுத்தர விவசாயிகளின் கோரிக்கைகள் சம்பந்தமாக கீழ்வரும்தீர்மானத்தை இயற்றியுள்ளது.

தமிழகவிவசாயத்தொழிலாளர்கள், சிறிய நடுத்தர விவசாயிகளின் நிலைபற்றி இந்திய கம்யூனிஸ்ட் கடசி (மார்க்சிஸ்ட்) யின் தமிழ் மாநிலக்குழு ஆழ்ந்த கவலை கொண்டுள்ளது. விவசாயத் தொழிலாளர்களின் கூலி மிகவும் பரிதாபகரமான முறையில் குறைவாக உள்ளது. அந்த சமயம் விலைவாசி ஏறிக் கொண்டே போகிறது. எல்லா பணப்பயிர்களின் விலைகளும் வீழ்ச்சியடைந்திருப்பது ஏற்கனவேகடன் சுமையால் அல்லலுற்றுக் கொண்டிருக்கும் சிறிய நடுத்தர விவசாயிகளைப் பாதித்துள்ளது. இந்தப் பிரிவினர் தாக்குப்பிடிக்கும் சக்தியில்லாததினுல் அறுவடையானவுடனேயே தங்களுடைய விளை பொருளை வந்த விலைக்கு விற்க வேண்டியுள்ளது.

இந்த நிலைமையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியும் தமிழ்நாடு விவசாயிகள் சங்கமும் கீழ்க்கண்ட கோரிக்கைகளை எழுப்பிவருகின்றன.

### கோரிக்கைகள்

குறைந்தபட்ச ஊதிய சட்டத்தின் கீழ் மாநிலம் முழுவதிலும் விவசாயத் தொழிலாளர்களுக்கு நாள் ஒன்றுக்கு ரூ. 5 நியாயக் கூலி நிர்ணயிக்க வேண்டும்.

5 ஏக்கரும் அதற்குக் குறைவாகவும் நிலம் வைத்திருக்கும் எல்லா விவசாயிகளுக்கும் விவசாயத்துக்கான மின்சாரக் கட்டண உயர்வை ரத்து செய்ய வேண்டும்.

10 ஏக்கருக்குக் குறைவாக நிலம் வைத்திருக்கும் விவசாயிகள் அரசாங்கத்துக்கும் கூட்டுறவு நிறுவனங்களுக்கும் தனியார் லேவாதேவிக்காரர்களுக்கும் கொடுக்கவேண்டிய கடன்கள் உள்ளிட்டு எல்லா கடன்களையும் நிறுத்தி வைக்கவேண்டும். அவர்களுடைய கடன்களை வெகுவாகக் குறைக்க வேண்டும். தன்னுடைய அமைப்பு மூலம். அரசாங்கம்விவசாயிகளுக்குக் குறைந்த பட்ச விலை பாதுகாப்பை உறுதிப் படுத்த பணப்பயிர்களுக்கு விலை நிர்ணயம் செய்ய வேண்டும்.

இந்தக் கோரிக்கைகளை அடைவதற்காக ஒன்றரை மாதங்களுக்கு முன்பு தமிழ் நாடு விவசாயிகள் சங்கமும். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் இயக்கம் தொடங்கியது.

ஆனுல் மதுரையில் அகில இந்திய கட்சி மாநாட்டை நடத்தவேண்டியிருந்ததால் அந்த இயக்கத்தை இடையே நிறுத்தவேண்டியிருந்தது.

இதற்கிடையே, பெரு நிலப்பிரபுக்கள் தலைமையில் தமிழ்நாட்டில் நடந்த ஒரு மாதமாக விவசாயிகள் கிளர்ச்சி நடந்து வருகிறது. அதன் பிரதான கோரிக்கை எல்லா நிலவுடைமையாளர்களுக்கும மின் கட்டண உயர்வை ரத்து செய்ய வேண்டும் என்பதும், இவ்வாண்டில் விதிக்கப்பட்ட அதிகரிக்கப்பட்ட விவசாய வருமான வரியை ரத்துச் செய்ய வேண்டும் என்பதும் ஆகும். சிறிய, நடுத்தர விவசாயிகள் ஆதரவையும் பெற வேண்டும் என்பதற்காக. எல்லா விவசாயிகளுக்கும் கடன் நிவாரணம், பணப் பயிர்களுக்கு குறைந்தபட்ச விலைப் பாதுகாப்பு நிர்ணயம் ஆகியவற்றையும் தங்களுடைய கோரிக்கைகளில் அவர்கள் சேர்த்துக்கொண்டுள்ளனர் திரு கக்கன் தலைமையில் 29—6—72ம்தேதி நிறைவேற்றப்பட்ட போராட்ட செயல் கமிட்டிக் கூட்டத்தின் தீர்மானத்திலிருந்து இது தெளிவாகும். மின்சார விகிதத்தில் அற்பமான 1 காசைக் குறைக்கவேண்டும் என்பதற்காக போராடிக் கொண்டிருக்கவில்லை என்றும் அதிகரிக்கப்பட்ட விவசாய வருமான வரியை ரத்து செய்ய வேண்டும் என்பதற்காகவே போராடிக் கொண்டிருப்பதாகவும் அத்தீர்மானம் கூறுகிறது.

இப்போராட்டத்தில் சிண்டிகேட் காங்கிரசும் இண்டிகேட் காங்கிரசும் வலது கம்யூனிஸ்ட் கட்சியும் சேர்ந்துள்ளன. மின்சார கட்டணத்திலும் விவசாய வருமான வரியிலும் கடன் நிவாரணத்திலும் இந்த உயர்மட்ட நிலப்பிரபுக்களுக்கு எந்த நிவாரணமும் கொடுக்கக் கூடாது என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உறுதியான கருத்துக் கொண்டுள்ளது. பசுமைப் புரட்சியின்பெயரில்டிராக்டர்கள், பம்புசெட்டுகள், உரம் மற்ற கருவிகள் வாங்குவதற்கு அரசாங்கம் கொடுத்த கடனை வைத்துக்கொண்டு அவர்கள் மிகுந்த பயனடைந்து கொழுத்துள்ளார்கள் இந்நிலையில் அவர்கள் எந்த அனுதாபமும் பெற தகுதியற்றவர்கள்

இந்தப் போராட்டத்தில் ஏழை நடுத்தர விவசாயிகளின் கோரிக்கைகள் அடங்கியிருந்த போதிலும் இக் காரணத்தினுல் இக் கிளர்ச்சியிலும் போராட்டத்திலும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சேராது.

### அரசு அலுவலகங்கள் முன்பு கிளர்ச்சி

எனவே விவசாயத் தொழிலாளர்கள், ஏழை— நடுத்தர விவசாயிகளின் மேற்குறிப்பிட்ட கோரிக்கைகளுக்கான கிளர்ச்சியை மீண்டும் தொடங்க மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தீர்மானிக்கிறது. 1972 ஜுலை 12ம் தேதி மாநில அரசு அலுவலகங்களின் முன் ஆர்ப்பாட்டங்களுக்கு ஏற்பாடு செய்யுமாறும் கிளர்ச்சியை நீடிக்குமாறும் அது எல்லா உறுப்பினர்களையும் கேட்டுக்கொள்ளுகிறது இதற்கு எந்தப் பேச்சுவார்த்தையும் தேவையில்லையாதலால் நிர்வாக உத்திரவு மூலம் இக் கோரிக்கைகளை ஏற்குமாறு அரசாங்கத்தை அது கேட்டுக்கொள்ளுகிறது

பணப்பயிர்களுக்கு குறைந்தபட்ச விலை பாதுகாப்பு நிர்ணயிக்க வேண்டும்என்றும்இந்திய அரசாங்கத்தை வற்புறுத்த வேண்டும் என்றும் அது கேட்டுக் கொள்ளுகிறது.

ஏழை மக்களுக்கான தனது கவலையைப்பற்றி தி. மு. க. அரசாங்கம் தம்பட்டம் அடித்துக்கொள்ளும் போது, மின் சாரக் கட்டணம் சம்பந்தமாக அது சமீபத்தில் அளித்துள்ள சலுகை, ஏழை நடுத்தர விவசாயிகளுக்கு அற்பபயனையே அளிக்கிறது அதேசமயம் பெரிய நிலப் பிரபுக்கள் மிகுந்த லாபமடைகின்றனர் விவசாய வருமானத்தின் மீது வருமான வரியை சாம்பவுண்ட் செய்து கொள்ளுவதற்கு எல்லா நிலப்பிரபுக்களுக்கும் சலுகை அளித்திருப்பது பணக்காரப் பிரிவினருக்கு

(4-ம் பக்கம் பார்க்க)

## 3 லட்சம் பேர் கொண்ட பொதுக் கூட்டத்தில் தோழர் சுந்தரய்யா முழக்கம்

மதுரை, ஜுலை. 2—

ஹோசிமின் தலைமையில் வழிகாட்டப்பட்டு- ஞான மூட்டப்பட்டு - போராடும் வியட்நாம் மக்களிடம் ஆதர்சம் பெற்று-இந்திய மக்களின் நல்வாழ்வுக்காக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி போராடும் என்று பொதுச் செயலாளர் தோழர் பி. சுந்தரய்யா முழங்கினுர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் 9-வது மாநாட்டு இறுதி நாள் அணிவகுப்பில் அவர் உரையாற்றினுர்.

இந்திரா காங்கிரஸ் பேயரசினுல்அழித்துவிட முடியாதபெருஞ்சக்திகொண்டது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி என்பதைப் பறைசாற்றும் வண்ணம் கூட்டம் அமைந்திருந்தது. கூட்டம் நடைபெற்ற ரேஸ்கோர்ஸ் மைதானம் ஜனவெள்ளத்தில் ததும்பி வழிந்தது.

அண்மைகால வரலாற்றில் மதுரையில் 3 லட்சம் மக்கள் கூடியது இந்தக் கூட்டத்துக்குத் தான்.

கூட்டம் தொடங்கு முன் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசியல் தலைமைக்குழு உறுப்பினர்களுக்கும், மத்திய கமிட்டி உறுப்பினர்களுக்கும் சிவப்புத்துண்டுகள் அணிவிக்கப்பட்டன. மாவட்டக்குழு, நகரக்குழு சார்பில் தோழர்கள் ஏ. பி. பழனிச்சாமியும் வி. கார்மேகமும் இந்தத் துண்டுகளை அணிவித்தார்கள்.

ஒவ்வொரு தலைவருக்கும் துண்டு அணிவிக்கப்பட்ட போதும் மக்கள் கையொலி எழுப்பி ஆரவாரம் செய்தார்கள்.

(4-ம் பக்கம் பார்க்க)

தீக்கதிர்

# அடிப்படை ஜனநாயகம்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் (மார்க்சிஸ்ட்) 9—வது மாநாடு மதுரை மாநகரிலே கூடியபோது — தோழர் பி. டி. ரணதிவே அவர்கள், கட்சியின் நகல் தீர்மானத்தை ஆங்கிலத்தில் விளக்கிப்பேசினர். (அதன் விபரம் வேறிடத்தில் காண்க)

மாநாட்டில் 383 பிரதிநிதிகளும் மற்றும் பார்வையாளர்களுமாக 450 பேர் கூடியிருந்தார்கள்.

### பல்வேறு இனத்தவர்

மேற்கு வங்கம், மணிப்பூர், கோவா, குஜராத், ராஜஸ்தான், ஒரிசா, மகாராஷ்டிரா, திரிபுரா, அஸ்ஸாம், உத்தரபிரதேஷ், பஞ்சாப், ஹரியானு, டெல்லி, மத்தியப் பிரதேஷ், பீகார், தமிழ்நாடு, கர்நாடகம், ஆந்திரம், கேரளம் ஆகிய மாநிலங்களிலிருந்து வந்துள்ளார்கள்.

### மொழிச் சிக்கல்

ஆங்கிலம் தெரியாத தோழர்களுக்கு பி.டி. ரணதிவேயின் ஆங்கிலப் பேச்சை ஒவ்வொரு மொழியினருள்ளும் இருந்த ஆங்கிலம் தெரிந்த தோழர்கள், அந்த மொழியைச் சேர்ந்த ஆங்கிலம் தெரியாத தோழர்களின் அருகில் அமர்ந்து மொழி பெயர்த்துக் கூறினர்.

### சிக்கலைத் தீர்த்தனர்

பி. டி. ஆர். ஆங்கிலத்தில் 10 நிமிடம் பேசுவார். பேசி, குறிப்பிட்ட ஒரு இடத்தில் நிறுத்துவார். உடனே மாநாட்டுத் தலைவர், "மொழி பெயர்ப்பு தொடங்கட்டும்"—என்று ஒலிபெருக்கியில் உரைப்பார்.

உடனே, அந்தந்த மொழிகளைச் சேர்ந்த ஆங்கிலம் தெரிந்த தோழர்கள், ஆங்கிலம் தெரியாத தோழர்களுக்கு—அந்தந்த மொழியில் ஒரு 5 நிமிட நேரம்-பி டி. ஆர்.ஆங்கிலப் பேச்சை சுருக்கமாக விளக்கிக்கூறுவார்கள்

அந்தச் சமயத்தில் அந்தக் காட்சியைப் பார்க்க வேண்டுமே! இந்தியா முழுவதுமுள்ள அத்தனைமொழிகளிலும் ஒரு 5 நிமிட பிரச்சாரம் ஒரே மண்டபத்தில் நடக்கும்.

5 நிமிடம் ஆனவுடன் மணிசப்தம் கேட்கும். அத்தனை மொழிப் பேச்சுகளும் கப்சிப் என்று நின்று விடும். மீண்டும் பி. டி. ஆர். ஆங்கிலத்தில ஒரு 10 நிமிடம் நகல் தீர்மானத்தை விளக்கி ஒரு கட்டத்தில் நிறுத்துவார். மாநாட்டுத் தலைவர், "டிரான்ஸ்லேட்"—என்று கூறுவார்.

உடனே, அனைத்து இந்திய மொழிகளிலும் மீண்டும் சுருக்கமான விளக்கம் ஒலிக்கும்.

இவ்வாறு பி. டி. ஆர். இந்திய அரசியல் வாழ்வில் கடந்த 3 ஆண்டு கால வளர்ச்சி,வரலாற்றில்,மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கடைப்பிடித்து வந்த கொள்கைகளை ஆங்கிலத்தில் விளக்கி—10 நிமிடங்களுக்கொரு தடவை 5 நிமிட நேரம் மொழி பெயர்ப்புக்கு இடைவெளி விட்டு பேசி, விளக்கவுரையை முடித்தார்.

இவ்வாறு மொழிப் பிரச்னைக்கு மாநாட்டைப் பொறுத்தவரையில் திருப்திகரமான வழி கண்டு பிடிக்கப் பட்டது.

இது நகல் தீர்மானத்தின் மீது பி டி.ஆர். அளித்த ஆங்கில விளக்கவுரைக்குத்தான்.

### அனைத்து மொழிகளிலும் நகல் தீர்மானம்

ஆனுல் நீண்டநகல் தீர்மானமோ, ஆங்கிலத்தில் மட்டுமின்றி — அனைத்து மாநிலங்களின் அந்தந்த மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு —புத்தக வடிவத்திலும்,பத்திரிக்கைகளிலும், வெளியிடப்பட்டு—கட்சி உறுப்பினர்களுக்கும் ஆதரவாளர்களுக்கும் பொதுமக்கள் அனைவருக்குமே, மாநாட்டுக்கு பல மாதங்களுக்கு முன்னதாகவே அறிந்துகொள்ள வாய்ப்பு ஏற்படுத்தப்பட்டது,

## மார்க்சிஸ்ட் கட்சி மாநாட்டில் எப்படி?

அதன் மீது கட்சித் தோழர்கள், அவரவர் கிளைகளில் விவாதங்கள் நடத்தி—பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்பினுர்கள். ஆகவே எல்லா பிரதிநிதிகளுக்கும் நகல் தீர்மானத்தின் வாசகங்கள் முழுவதும் நன்கு தெரியும்.

இவ்வாறு,என்ன தீர்மானம்வந்தது? அதன்மீது என்ன விளக்கம் கொடுக்கப்பட்டது? என்பதை தெரிந்து கொள்ளவும்— அறிந்து கொள்ளவும் அனைவருக்கும் வாய்ப்பு ஏற்பட்டது.

### கருத்துக்களைக் கூற வாய்ப்பும் கிடைத்தது

அது மட்டுமல்ல மாநாட்டுப் பிரதிநிதிகள், மாநில வாரியாக நகல் தீர்மானத்தின் மீது தத்தம் கருத்துக்களை எடுத்துக் கூற வாய்ப்பும் கொடுக்கப்பட்டது.

எப்படி என்ருல் :

மாநிலங்களின் பிரதிநிதிகளின் எண்ணிக்கைக்கு ஏற்ப நேரம் ஒதுக்கப்பட்டது உதாரணமாக, மேற்கு வங்கத்திலிருந்து அதிக எண்ணிக்கையில் பிரதிநிதிகள் வந்திருந்தார்கள் அவர்களுக்கு கூடுதல் நேரம் ஒதுக்கப்பட்டது. அடுத்து கேரளத் தோழர்கள் — அதற்கடுத்தபடி தமிழ்நாட்டுத் தோழர்கள் — பின் ஆந்திரத்தோழர்கள் இப்படி ஒவ்வொரு மாநிலத்திற்கும் நேரம் ஒதுக்கப்பட்டது.

கம்யூனிஸ்ட் கட்சியில் உள்ளதுபோல கிராமக் கமிட்டிகள் வார்டு கமிட்டிகள், தொழில்கமிட்டிகள் வாரியாகக்கூட்டி தலைமை தயாரித்த நகல் தீர்மானத்தைப் பற்றி விவாதிக்கவும்—அந்த வெளிச்சத்தில் தமக்கு விருப்பமான தோழரை பிரதி நிதியாகத் தேர்ந்தெடுத்து அனுப்பவும்—அந்தப் பிரதிநிதிகள்.........ஆங்கிலம் தெரியாதவராக இருந்தாலும்...மாநாட்டுத் தீர்மானங்கள், அறிக்கைகள், நடவடிக்கைகள் பற்றி தமது தாய்மொழியில் அறிந்து கொள்ளவும், தத்தம் கருத்துக்களை எடுத்துச் சொல்லவும் மாநாட்டு நடவடிக்கைகளில் நேரடியாகப் பங்கு கொள்ளவும் ஆன வாய்ப்புகள் முதலாளித்துவக் கட்சிப் பிரதிநிதிகளுக்கு கிடைப்பதில்லை, கொடுக்கப்படுவதுமில்லை.

### ஏனையகட்சிகளின் மாநாடுகளிலே

அவர்களது மாநாடுகளில் தலைவர்களே தீர்மானங்களை உருவாக்குவார்கள். தலைவர்களே பேசுவார்கள், பெருந் தலைவர்கள் சொற்பொழிவுகள் ஆற்றுவார்கள். ஒருவருக் கொருவர் புகழ்மாலைகள் சூட்டுவார்கள். ஒரே தலைவி அல்லது தலைவர், ஒரே கட்சி என்பார்கள். அவர்களுக்கு மாலைகள் சூட்டுவதிலேயே நேரத்தை கழிப்பார்கள். பேச்சாளர்கள் பேசக்கூடிய பேச்சுகளும், வெறும் பேச்சுப் போட்டி போலத்தான் இருக்குமே தவிர, நாட்டுப் பிரச்னைகளைப் பற்றிய ஆழ்ந்த அறிவோடு, ஆழ்ந்த சிந்தனையோடு கூடிய பேச்சாக விவரமாக இருக்காது.

அவர்களது மாநாடுகளுக்கு வரும் பிரதிநிதிகளும் யார் அதிக கட்டணமும், கூடுதல் நிதியும் அளிக்கிருர்களோ, அவர்கள்தான் பெரிய பேட்ஜ்களை விசிறிபோல தொங்க விட்டுக் கொண்டு பிரதிநிதிகளின் ஆசனத்தின் முன் வரிசையில் அமர்ந்திருப்பார்கள்.

கம்யூனிஸ்ட் கட்சிப் பிரதிநிதிகளைப் போல, கீழ் மட்டத்திலிருந்து மேல்மட்டம்வரை, தேர்ந்தெடுக்கப் பட்ட பிரதிநிதிகளாக அவர்கள் இருக்க மாட்டார்கள்.

### தீர்மான கதி

அடுத்த மாநாடுவரை வழிகாட்டக் கூடிய தீர்மானத்தைப்பற்றி எவருக்கும் கவலை இருக்காது. அது தலைவர்களுடைய பிசினஸ்...அவர்கள் எது சொல்கிருர்களோ அது சரி...அவ்வளவுதான்.

இதுதான் ஜனநாயகமா!—ஜனநாயகம் என்ருல் இப்படித்தான் இருக்குமா?—என்று நாம் கேட்டால், அதற்கு அவர்கள் என்ன சொல்லுகிருர்கள்?

## முதலாளித்துவ கட்சிகள் மாநாட்டில் எப்படி?

உதாரணமாக, மேற்கு வங்கத்துக்கு 100 நிமிடமும், கேரளத்துக்கு 90 நிமிடமும், தமிழ்நாட்டுக்கு 45 நிமிடமும், ஆந்திரத்திற்கு 45 நிமிடமும் ஏனைய மாநிலங்களுக்கு 15 நிமிட வீதமும் அளிக்கப்பட்டது.

இந்த நேரத்துக்குள் எப்படி எல்லா விஷயத்தையும் பற்றி திருத்தங்கள் கொடுத்துப் பேசுவது? அதற்கும் வழி செய்யப்பட்டது. அதாவது:—

பி டி. ஆரின் விளக்கவுரை முடிந்த பிறகு— அன்று இரவே, அந்தந்த மாநிலப் பிரதிநிதிகள் அவரவர் முகாம்களில், மணிக்கணக்கில் கூடி, நகல் தீர்மானத்துக்குக் கொடுக்கவேண்டிய திருத்தங்களைக் கொடுத்து விவாதித்து— மொத்தக் கருத்தையும் மாநாட்டில் எடுத்துப் பேச தமக்குள் ஒருவரையோ, இருவரையோ,... ஒதுக்கப் பட்ட நேரத்துக்குத் தக்கபடி... தேர்ந்தெடுத்தார்கள்.

தேர்ந்தெடுக்கப்பட்ட பேச்சாளர் அனைவரின் திருத்தங்களையும் ஒரு முகப்படுத்தி, மாநாட்டில் எடுத்துரைப்பார்.ஆங்கிலத்திலும் எடுத்துரைப்பார்கள். அந்தந்த தாய்மொழிகளிலும் எடுத்துரைப்பார்கள். அதன் சாரம் என்ன என்பது, தலைமையின் கைக்குக் கிடைத்துவிடும்.

நகல் அரசியல் தீர்மானம் மட்டுமல்ல, மற்றுமுள்ள முக்கிய நகல் தீர்மானங்களும் முன்கூட்டியே பிரதிநிதிகள் கைக்குக் கிடைக்கச் செய்த பிறகுதான், அந்த நகல் தீர்மானங்களை மாநாட்டுக்கு முன் கொண்டுவருவார்கள்: அதனுல், கொண்டுவரப்படும் தீர்மானம் என்ன என்பது முன்கூட்டியே தெரிந்து புரிந்து கொள்ளவும், அதன் மீது தமது கருத்தை உருவாக்கவும் போதிய அவகாசம் கிடைக்கிறது.

### அடிப்படை ஜனநாயகம்

இதுதான், கம்யூனிஸ்ட் கட்சியின் மாநாடு, தனது பிரதிநிதிகளுக்கு வழங்கக் கூடியஅடிப்படை ஜனநாயகம்.

இதுபோன்ற ஜனநாயகத்தை, முதலாளித்துவக் கட்சிகளின் மாநாடுகளில் எங்காவது பார்க்க முடியுமா? தீர்மானத்தை உருவாக்குவதிலும் செம்மைப் படுத்துவதிலும் அந்தப் பிரதிநிதிகளுக்கும் உரிமைகள் வழங்கப் பட்டிருந்தாலும், நடைமுறையில் வசதியுள்ளவர்கள் தடுத்து வாயடைத்து விடுவார்கள். அவகாசமும் கொடுக்கமாட்டார்கள்.கீழ்மட்டத்திலிருந்து, அதாவது,

"அந்தத் தலைவரே முக்காலமும் உணர்ந்தவர்கள் அவருக்குத் தெரிந்ததைவிட நமக்கு என்ன தெரியும்?"... என்பார்கள் ஒரு கட்சியினர்.

"அவரோ பெருந்தலைவர், அகில இந்திய அரசியல் அத்தனையையுமே அவரது சுண்டு விரல் கயிற்றிலே பம் பரமாய் ஆட்டுவார்.

ஆதியும் அவரே— அந்தமும் அவரே... அவரே... அத்தனையும் அவரே... அவருக்குமேலே நமக்கென்ன அனுபவம் இருக்கிறது? என்று பிறிதொரு கட்சியினர் சொல்லுகிருர்கள்.

இப்படி தனி மனித வழிபாட்டிலும், தனி மனித அறிவிலும்,தனி மனித திறமையிலும் மட்டுமே நம்பிக்கை வைத்து தடம்புரள்கின்ற கட்சிகளையும் காட்சிகளையும் பார்த்துவருகிருேம்.

### ஜனநாயகம் எது? சர்வாதிகாரம் எது?

நமது கட்சியின் தீர்மானங்களை நாம் எப்படி கீழ் மட்டத்திலிருந்து உருவாக்குகிருேம் என்பதையும் — முதலாளித்துவ கட்சிகள் எப்படி தமது தீர்மானங்களை மேல் மட்டத்திலிருந்து உருவாக்குகிருர்கள் என்பதையும் பார்த்தோம்.

இப்படி அடிப்படை ஜனநாயகத்தை தமது கட்சி உறுப்பினர்களுக்கு வழங்காத முதலாளித்துவக் கட்சிகளின் தலைவர்கள்தான், நமது கம்யூனிஸ்ட் கட்சியை ஜனநாயகமற்ற கட்சி என்றும், சர்வாதிகாரக் கட்சி ஏன்றும், நாலு தலைவர்கள் சொன்னுல் அதற்குத் தலையாட்டுகிற ஊழியர்கள் என்றும் அவதூறுகளும், பொய்களும் பொழிகிருர்கள்.

கம்யூனிஸ்ட்கட்சி வழங்குவது போன்ற அடிமட்டத்திலிருந்து ஜனநாயக உரிமைகளையும், அதைப் பயன்படுத்தக் கூடிய வாய்ப்புகளையும், முதலாளித்துவக் கட்சித் தலைவர்கள் தமது கட்சி உறுப்பினர்களுக்கும் அளிப்பார்களா?—அளிக்க மாட்டார்கள். அளித்தால் என்ன ஆகும்? சுரண்டல் வர்க்கத்தின் குறிக்கோள்கள் தகரும். அதனுல் தான் ஒரே கட்சி, ஒரே தலைவி,ஒரே நாடு என்று பேசுகிருர்கள்.

—ஐ. மாயாண்டிபாரதி

## காங்கிரஸ் ஆட்சியின் ஊழல்

மைசூர் மாநிலத்தில் கட்டப்பட்டுள்ள சரவதி அணைக்கட்டுத் திட்டத்தில் பயங்கர ஊழல் நடந்திருக்கிறது. இதைப்பற்றி விசாரணை நடத்த வேண்டும் என்ற கோரிக்கை மைசூர் சட்ட மன்றத்தில் எழுந்துள்ளது. இந்த அணைக்கட்டுத் திட்டம், அந்நிய உதவியுடன் ரூ. 120 கோடி செலவில் கட்டப்பட்டதாகும்.

இந்த நீர் மின்சார உற்பத்தித்திட்டம் ஆசியாவிலேயே மிகப்பெரியதாகும். இது கட்டப்பட்டு வரும் போதே, 1968-ம் ஆண்டில் சுற்றுக் கால்வாயில் பதிக்கப்பட்டிருந்த கற்கள் பெயர்ந்து அதனுல், ரூ.3லட்சத்துக்கு ரிப்பேர் செலவு ஏற்பட்டிருக்கிறது. பின்னர் ரூ. 186 கோடி செலவிலான இந்தக்கால்வாயைப்பாதுகாப்பதற்கு, மேற்கொண்டு ரூ. 22 லட்சத்தில் ரிப்பேர் செலவு செய்யப்பட்டுள்ளது.

பின்னர் டலக்லேல் அணைக்கு ஏற்பட்ட சேதத்துக்கு ரூ. 7½ லட்சத்தில் ரிப்பேர் செலவு செய்யப்பட்டிருக்கிறது. அதைத் தொடர்ந்து பல ரிப்பேர் செலவுகள் ஏற்பட்டன.

பல கான்டிராக்டர்களும் என்ஜினியர்களும் கூடி மோசடி செய்து லட்சக்கணக்கில் கொள்ளையடித்திருப்பது இப்போது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

இதை ஒரு பெரிய தேசிய மோசடி என்று மைசூர் பொதுப் பணித்துறை அமைச்சர் சென்னபாசப்பாவே வர்ணித்துள்ளார். (இந்த அணைக்கட்டு வேலை தொடங்கப்பட்ட 1959-ம் ஆண்டில் பொதுப் பணித்துறை அமைச்சராக இருந்தவரும் இதே சென்ன பாசப்பாதான்.)

இந்த மோசடியின் காரணமாக லிங்கன் மக்கி அணையின் மதகுகளும் கால்வாய்களும் சேதமடைந்துள்ளன. டலக்லேல் அணையின் கட்டுமானம் பெயர்ந்துள்ளது. இதனுல் கற்களும் இரும்புத் துண்டுகளும் தண்ணீரில் அடித்துச் செல்லப்பட்டு (மின் உற்பத்தி செய்யும்) ஜெனரேட்டர்களில் சிக்கியுள்ளன.

இந்த நிலைமைக்குக் காரணம் யார்?

முன்பு பதவியிலிருந்த வீரேந்திரபாட்டீல் அமைச்சரவை மீது பழி சுமத்தி தற்போதைய மைசூர் பொதுப்பணித்துறை அமைச்சர் சென்னபாசப்பா சட்டமன்றத்தில் பேசியுள்ளார்.

ஒன்ருயிருந்த காங்கிரசின் சார்பில் முதலமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்தான் வீரேந்திர படேல்.

இப்போது வீரேந்திரபடேல் சிண்டிகேட் காங்கிரசில் இருப்பதால், அவர்மீது மட்டும் பழியைச்சுமத்தி இவ்வளவு பெரிய ஊழல் நடந்திருப்பதற்குத் தன் மீதும் தான் சார்ந்துள்ள கட்சி (இந்தரா காங்கிரஸ்) மீதுமுள்ள பழியைப்போக்கிவிடலாம் என்று சென்ன பாசப்பா முயலுகிருர்.

இந்த ஊழலைப்பற்றி விசாரணை நடத்த வேண்டும் என்று கோரும் சென்னபாசப்பா அணை கட்டப்பட்ட சமயத்தில் தாமே பொதுப்பணித்துறை அமைச்சராக இருந்ததை மறந்து விட்டார். இப்போதும் தாமே பொதுப்பணித்துறை அமைச்சராக இருக்கும் நிலையில் அப்பதவியிலிருந்து விலகாமல் எப்படி நியாயமான விசாரணை நடைபெறும் என்பதை அவர் விளக்கவில்லை.

ஊழலின் உறைவிடமாகத் திகழ்வதே காங்கிரஸ். அக்கட்சி மேற்கொண்ட எந்தத்திட்டமும் ஊழலின்றி நிறைவேறியதென்று கூற முடியுமா?

ஒரிசாவில் ஹிராகுட் அணைக்கட்டுத் திட்டத்தில் நடந்த ஊழலை அப்போது ஒரிசா கவர்னராக இருந்த குமாரசாமி ராஜாவே அம்பலப்படுத்தினர்.

அதைத் தொடர்ந்து எண்ணற்ற ஊழல்கள் நடந்திருப்பதை நாடு கண்டிக்கிறது.

காங்கிரஸ் அமைச்சர்களைப் போன்ற ஊழல் பேர்வழிகளை வேறெங்கும் காண முடியுமா?

### அரவிந்தர் ஆசிரம

## ஆல்இந்தியாபிரஸ்தொழிலாளர் உண்ணுவிரதப் போராட்டம்

புதுவை, ஜூலை. 2—

வேலை நிரந்தரம், ஊதிய உயர்வு, பிராவிடன்ட் பண்ட், மருத்துவ வசதி ஆகிய கோரிக்கைகளை அடைய தமிழன் — மலையாளி என நிர்வாகத்தால் கடந்த இரண்டு ஆண்டுகளாக பிளவுபடுத்தப்பட்டு ஒரு கொடுமையான சுரண்டலுக்கு ஆளாகிவந்த ஆல் இந்திய பிரஸ் தொழிலாளர்கள் சி ஐ டி யூ வின் தலைமையில் ஒன்றுசேர்ந்து ஒரு சங்கம் அமைத்தனர். சங்கம் செயல்பட்டால் தனது சுரண்டலை தீவிரப்படுத்த இயலாதே எனப் பயந்த ஆசிரம நிர்வாகம் அங்கு வேலை செய்த 48 பேரில் 12 பேரை வேலை நீக்கம் செய்துவிட்டது. அதை எதிர்த்து பழிவாங்கப்பட்டவர்களுக்கு வேலை வேண்டி கடந்த 15 நாட்களாக முழுமையானவேலை நிறுத்தமும் உண்ணுவிரதமும நடத்தினர்.

ஆசிரம நிர்வாகத்தின் சண்டித்தனத்தை முறியடிக்க தொழிலாளர்கள் உண்ணுவிரதப் போராட்டமும், மாபெரும் ஊர்வலமும் ஆர்ப்பாட்டமும் நடத்தினர்.




## கெடுபிடி கடன் வசூலை நிறுத்துக

ஐயா,

மதுரை மாவட்டம், பழநி வட்டத்தைச் சேர்ந்த போடுவார்பட்டி ஏழை விவசாயிகளிடம் கூட்டுறவு நாணய சங்க ஜப்தி அதிகாரிகள், கெடுபிடியுடன் வசூல் செய்கின்றனர். விவசாயிகளின் தோட்டங்களுக்கும் வீடுகளுக்கும் சென்று, அவர்களது ஆடு, மாடுகளை ஜப்தி செய்கின்றனர். விரைவில் கடனைத் திருப்பிச்செலுத்தி விடுவதாக விவசாயிகள் கெஞ்சிக் கேட்டுக்கொண்டாலும் அவர்கள் மீது அதிகாரிகள் இரக்கம் காட்டுவதில்லை ஜப்தி செய்து கொண்டு செல்லப்படும் ஆடு, மாடுகளுக்கு தீவனம் கொடுக்காமல் பட்டினி போடுகின்றனர்.

போடுவார்பட்டி கிராமம் மிகவும் பின்தங்கியதாகும், வறுமையினுலும் விலைவாசி உயர்வாலும் தாங்கள் உற்பத்தி செய்யும் பொருட்களுக்கு நியாயவிலை கிடைக்காததாலும் விவசாயிகள் பெரிதும் கஷ்டப் படுகின்றனர்.

எனவே கூட்டுறவு நாணயச் சங்க அதிகாரிகளின் கெடுபிடியையும் ஜப்தி நடவடிக்கையையும் "விவசாயிகள்அரசு" என்று தன்னைக் கூறிக்கொள்ளும் தி. மு. க அரசு தடுத்து நிறுத்துமா?

இப்படிக்கு
ந. வ. க. தங்கவேல்,
போடுவார்பட்டி,

## மகளிர் கல்லூரியில் கட்டாய நிதி வசூல்

ஐயா,

சென்னையில் உள்ள ஒரு மகளிர் கல்லூரியில் ஊழல் பெருகிவிட்டது. கல்லூரியில் சேர இடம் கிடைத்தாலும் நன்கொடை கட்ட வேண்டும். நன்கொடை டிக்கெட்டுகள் ரூ. 50, ரூ. 100, ரூ. 200 வரை உள்ளன மாணவிகள் கல்லூரியில் சேர இடம் கிடைத்ததும், பணம் கட்டுவதற்கு முன் கட்டாயமாக நன்கொடைடிக்கெட்டுகளை வாங்க வேண்டும்.

நன்கொடை டிக்கெட்டுகளை வாங்காதவர்களுக்கு கல்லூரியில் இடம் கிடையாது. இதனுல ஏழை பெற்ருேர்கள் துன்பமடைகின்னர். ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணும் (?) ஆட்சியில் ஏழை எங்கே சிரிக்க முடிகிறது?

இந்த கட்டாய லஞ்சததை ஒழிக்க அதிகாரிகளும் அரசும் தக்க நடவடிக்கை எடுக்குமா?

இப்படிக்கு,
செங்கொடியான்
சென்னை.

## தென்மண்டல பீடி தொழிலாளர் மாநாடு

### மங்களூரில் செப்டம்பரில் நடைபெற பிரமாதமான ஏற்பாடுகள்

மதுரை, ஜூன், 30—

பீடித் தொழிலாளர்களின் தென் மண்டல மாநாடு, இவ்வாண்டு செப்டம்பர் 24, 25 தேதிகளில் மைசூர் மாநிலத்திலுள்ள மங்களூரில் நடத்துவது என தென்மாநில பீடித் தொழிலாளர் சங்கங்களின் பிரதிநிதிகள் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

மதுரையில் 30—6—72ல் இக்கூட்டம் தமிழ்நாடுபீடித் தொழிலாளர் சம்மேளனத் தலைவர் தோழர் ஆர். உமாநாத் தலைமையில் நடைபெற்றது.

### கலந்து கொண்டோர்

இக் கூட்டத்தில் மைசூர் மாநில சி ஐ டி யூ தலைவர் எஸ். சூரிய நாராயணராவ், தென் கன்னட மாவட்ட பீடித்தொழிலாளர் சங்கத் தலைவர் பி. நாராயண், மைசூர் மாநில சி ஐ டி யூ செயலாளர் பி. ராமச்சந்திரராவ் ஆகியோரும், கேரள மாநில பீடி—சுருட்டு தொழிலாளர் சம்மேளனத் தலைவர் தோழர் சி. கண்ணன், தோழர் பரதன் (கேரளம்) ஆகியோரும், ஆந்திர மாநில சி ஐ டி யூ உபதலைவர் பரசா சத்திய நாராயணு ஆகியோரும் — தமிழ்நாடு பீடித் தொழிலாளர் சம்மேளன பொதுச் செயலாளர் வே. கண்ணன் சம்மேளன உபதலைவர் வி. கே. கோதண்டராமன் ஆகியோரும் கலந்து கொண்டனர்.

### ஏ.கே.ஜி. வருகிருர்

மாநாட்டு நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ளவும், வாழ்த்துரை வழங்கவும் தோழர்கள் ஏ. கே. கோபாலன் எம். பி., ஆர். உமாநாத், கேரளதலைவர் சி. கண்ணன், வி.கே. கோதண்டராமன், வே. கண்ணன் ஆகியோர் கலந்து கொள்ள விருக்கின்றனர்.

# மார்க்சிஸ்ட் கட்சி 9-வது மாநாடு

## 27-6-72 — 2-7-72 மதுரை.

மாநாட்டின் துவக்க விழாவின் போது மாநாட்டு அரங்கத்தில் பிரதிநிதித் தோழர்களும், மற்றவர்களும் அமர்ந்திருக்கும் காட்சி.

மேற்கு வங்கத் தோழர்கள் கொணர்ந்த — மேற்கு வங்கத்தில் இந்திரா காங்கிரசு அரசும் போலீசும் புரியும் அரைப்பாசிச அடக்கு முறைகளைச் சித்திரித்து வரையப்பட்ட படங்கள் காட்சிக்காக வைக்கப்பட்டுள்ளன.

பிரதிநிதித் தோழர்கள் உணவருந்துகிறார்கள்.

மாநாடு துவங்குவதற்கு முன்பு

இயக்கப் பாடல்களை மதுரை குமார் குழுவினர் பாடுகின்றனர்.

# இந்திரா, தி. மு. க. அரசுகளின் அடக்குமுறைக்கு கண்டனம்

## எதிர்த்து முறியடிக்குமாறு மார்க்சிஸ்ட் கட்சி மாநாடு அறைகூவல்

மதுரை, ஜூன் 30— மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மதுரை மாநாடு, காங்கிரஸ் அரசின் அடக்கு முறைகளையும் தமிழ்நாட்டில் திமுக அரசின் அடக்கு முறைகளையும் வன்மையாகக் கண்டித்தது.

மேற்கு வங்கம், கேரளம், ஆந்திரம், கர்னாடகம், மகாராஷ்டிரம், திரிபுரா, பீகார், ராஜஸ்தான் உத்தரபிரதேஷ் ஆகிய மாநிலங்களில் இந்திரா அரசு நடத்தி வரும் கொடுமைகளை விளக்கமாகக்கூறி, தமிழ்நாட்டில் தி மு க. அரசு நடத்திவரும் அடக்கு முறையையும் பின்வருமாறு கண்டித்தது.

### தமிழ்நாட்டிலே

தி மு. க. ஆட்சி நடைபெறும் தமிழ்நாட்டிலும் மக்களுக்கு எதிராக அடக்கு முறை தீவிரமாக நடத்தப் படுகிறது. அடக்குமுறையில் தி. மு. க. அரசு, காங்கிரஸ் அரசுக்குசளைத்துவிடவில்லை 1970-ம்ஆண்டு ஜூன் மாதத்தில் நீர்ப்பாசன மின் கட்டணத்தைக் குறைக்கவேண்டு மென்பதற்காக விவசாயிகள் கிளர்ச்சி செய்தபோது அமைதியாகஇருந்ததொண்டர்கள் மீது மிருகத்தனமாக தாக்குதல் தொடுத்தார்கள் அப்போது நடந்த துப்பாக்கி சூட்டில் 3 பேர் கொல்லப்பட்டார்கள்.

### நெய்வேலி-தென்காசி

1970, மேமாதத்தில்நெய் வேலி தொழிலாளர்கள் மீது துப்பாக்கி சூடு நடத்தியதில் ஒருவர் பலியானர்.

1970 ஆகஸ்டில் தென்காசியில் வீட்டுவரி உயர்வைக்கண்டித்து ஆர்ப்பாட்டம் செய்த மக்கள் மீது துப்பாக்கி சூடு நடத்தப் பட்டது.

### அண்ணாமலை, சிம்சன்

1971, ஜூலையில் அண்ணாமலை பல்கலைக் கழகத்திற்கு முதலமைச்சர் கருணாநிதி வந்தபோது வேலை கோரி ஆர்ப்பாட்டம் செய்த மாணவர்கள் மீது மிருகத்தனமாக தடியடி நடத்தப் பட்டது. தடியடி நடத்திய போலீஸார் கல்லூரி விடுதிக்குள் புகுந்துங்கூட தாக்கினர்கள். அதன் விளைவாக ஒருமாணவரின் உயிர் பலியாயிற்று.

1971 நவம்பர்—டிசம்பர் மாதங்களில் சென்னையில் சிம்சன் தொழிலாளர் சங்கத்தைக் கைப்பற்றுவதற்காக போலீஸ் உதவியோடு குண்டர்கள் சிம்சன் தொழிலாளர்களைத்தாக்கினர்கள். ஏராளமானவர்களைக் கைது செய்து சிறையில் அடைத்தார்கள் பாதுகாப்பு சட்டப்படி சிம்சன் தொழிலாளர் வேலை நிறுத்தப் போராட்டத்தை சட்ட விரோதமாக்கிருர்கள்.

இதுபோலவே, நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷனில் மத்திய அரசாங்கம் பாதுகாப்புச் சட்டத்தைப் பிரயோகித்து வேலைநிறுத்தத்தை தடை செய்தது.

### ஆவடி

1972, ஜனவரியில் ஆவடி டாங்குத் தொழிற்சாலையில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தபோது, சி ஐ டி யூ சங்கத்தலைவர் தோழர் வி.பி சிந்தனையும், மற்றும் குசேலரையும் ஏ ஐ. டி. யூ யைச் சேர்ந்தவர்களையும் மிருகத்தனமாக போலீஸ் அடித்து நொறுக்கியது.

பின்னர், இந்த மிருகச் செயல்களுக்கெதிராக, சென்னை நகரில் கண்டன வேலை நிறுத்தம் செய்த போது, 200 தொழிலாளர்களைக் கைது செய்தார்கள். இந்துஸ்தான் டெலிபிரிண்டர் தொழிற்சாலைத்தொழிலாளர்கள் மீதும், கிண்டி தொழில்பேட்டை தொழிலாளர்கள் மீதும் போலீசார் தடியடி நடத்தினர்கள். போலீஸ் லாக்கப்புகளிலே சித்திரவதை செய்தார்கள், பலர் கைது செய்யப்பட்டார்கள்.

### கோவை பஞ்சாலை

1972, பிப்ரவரி — மார்ச் மாதங்களில், கோயம்புத்தூரிலே, பஞ்சாலை தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தபோது, 900 தொழிலாளர்கள் கைது செய்யப் பட்டார்கள்.

### வால்பாறை

1972, மே மாதத்தில், வால்பாறை தோட்டத் தொழிலாளர்கள் நடத்திய ஊதிய உயர்வுப் போராட்டத்தின்போது, 700க்கும் மேற்பட்டவர்கள் கைது செய்யப்பட்டார்கள். வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டதற்காக, தொழிலாளர் குடியிருப்புகளுக்குள் புகுந்து தொழிலாளர் மீது போலீஸார் வெறித்தனமாகப் பாய்ந்து அடித்து நொறுக்கினர்கள்.

### விவசாயிகள்

இப்பொழுது நீர்ப்பாசன மின் [illegible]ட்டணத்தைக் குறைக்க வேண்டு மென்று விவசாயிகள் நடத்திவரும் கிளர்ச்சியை அடக்க பல்லாயிரக்கணக்கானோர் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள்.

இவ்வாறு, அகில இந்திய ரீதியில் காங்கிரஸ் சர்க்கார்களும் தமிழகத்தில் தி. மு. க அரசும்கட்டவிழ்த்து விட்டுவரும் அடக்கு முறைகளை மாநாடு கண்டித்தது. இந்த அடக்குமுறைக் கொள்கையானது சுரண்டல் வர்க்கங்களை பாதுகாப்பதையே தொழிலாகக் கொண்டிருக்கிறது.

மத்திய காங்கிரஸ் ஆட்சியாளர்களின் அடக்கு முறையை எதிர்த்தும் தி. மு. க. அரசின் அடக்கு முறையை எதிர்த்தும் சகல கட்சியினரும் ஜனநாயக இடதுசாரி சக்திகளும் போராட முன் வருமாறு மாநாடு அறைகூவல் விடுத்தது.

### கர்னடகம்

தென்கனரா பகுதியில் ஏழை விவசாயிகளை அவர்களது நிலத்தைவிட்டுவெளியேற்ற போலீஸ், குண்டர்கள், நிலப்பிரபுக்களின் கூட்டுத் தாக்குதல் தொடர்ந்து நடந்துகொண்டிருக்கிறது.

ஹன்னையா ரூர்ஜாரி என்ற ஏழை விவசாயி இந்த ஆண்டு ஜனவரி மாதத்தில் படுகொலை செய்யப்பட்டார் ஆனல் போலீசார் பாதிக்கப்பட்ட விவசாயிகளின் மீதுதான் வழக்கு தொடுத்தனர்.

அதைப் போலவே தென்கனரா மாவட்டத்தில் சுபா தாலுகாவில் உள்ள விவசாய தொழிலாளிகளையும் சிறுபான்மை மக்களின் மீதும் போலிஸ் உதவியுடன் நிலப்பிரபுத்துவக் குண்டர்கள் தாக்குதல் நடத்தினர்கள்.

பெங்களூரிலுள்ள ராமா குமார் மில் தொழிலாளிகளின் மீது குண்டர்களை ஏவிவிட்டு மில் நிர்வாகம் தாக்குதல் கொடுத்தது. ஆனல் போலீசார் ஏராளமான, தொழிலாளிகளின் மீதும், சங்கத்தின் தீவிர ஊழியர்கள் மீதும் வழக்கு பதிவு செய்துள்ளனர்.

### மராட்டியம்

அம்பர்நாத் துப்பாக்கிச் சூட்டில் 9 தொழிலாளர்கள் கொல்லப்பட்டனர் சம்பள பாக்கியை கர வலியுறுத்தி ஏற்கனவே நிர்வாகம் தருவதாக ஒத்துக்கொண்டு கையெழுத்திட்டபடி தந்தால்தான் தொழிற்சாலையை விட்டு நகருவோம் என்று ஆர்ப்பாட்டம் செய்தபோது இத்துயர சம்பவம் நிகழ்ந்தது.

பஞ்ச நிவாரண வேலைகளை துவக்குவதில் அரசாங்கம் காட்டிய அலட்சியத்தையும் அசட்டையான போக்கையும் கண்டித்துமாவட்டமாஜிஸ்திரேட் அலுவலகத்திற்கு முன் ஆர்ப்பாட்டம் செய்த சட்டமன்ற உறுப்பினர் தோழர் விக்தால்ராவையும் மற்றவர்களின்மீதும் போலீசார் தடியடிப்பிரயோகம் செய்தனர்.

அரிஜனப் பெண்களுக்கு இழைக்கப்பட்ட அநீதியை எதிர்த்துசட்டமன்றத்திற்கு முன் ஆர்ப்பாட்டம் செய்த அரிஜன பெண்கள், ஆண்களின் மீது போலீசார் தாக்குதல் தொடுத்தனர்.

(மற்ற மாநிலங்களில் ஆளும் வர்க்கங்கள் தொடுத்த அடக்குமுறைகள் பற்றிய விபரம் அடுத்த இதழில் வெளிவரும்).

## "தீக்கதிர்" வளர்ச்சி நிதி

பொன்மலை எலக்ட்ரிக்கல்ஸ் பவர் ஷாப்பில் பணி புரிந்துவந்த தோழர் முனிசாமி ரிடையர்டு ஆனதை முன்னிட்டு 26—6—72-ல் வழங்கிய நன்கொடை ரூ. 5

பொன்மலை வேகன் ஷாப் ரிடையர்டு தொழிலாளி தோழர் தங்கவேலுவின் செல்வி த. கிருஷ்ணவேணிக்கும் — என் கிருஷ்ணமூர்த்திக்கும் 18—5—72ல் நடைபெற்ற திருமணத்தின் போது அளித்த நன்கொடை ரூ. 5

பொன்மலை டூல் ரூம் ஷாப் தொழிலாளி தோழர் எஸ். ராமச்சந்திரனின் புதல்வி செல்வி மல்லிகாவுக்கும் மாரியப்பனுக்கும் 22—6—72-ல் நடந்த திருமணத்தையொட்டி வழங்கிய நன்கொடை ரூ 5

ஆயக்குடி தோழர் கே. சின்னத்துரைக்கும் கிருஷ்ணம்மாளுக்கும் 22-6-72-ல் நடைபெற்ற திருமணத்தில் தோழர் என். பழனிவேல் மூலம் அளித்த நன்கொடை ரூ. 5

செல்வன் ஆர். வெங்கடாசலம் பி. எஸ். சிக்கும் செல்வி சிவகாமிக்கும் சிவகளையில் 21—6—72ல் நடந்த திருமணத்தின் போது தோழர் சு. இராமு மூலம் வழங்கிய நன்கொடை ரூ. 5

நமது கட்சியின் நண்பர்கள் இருவரது திருமணம் 26—6—72ல் கம்பத்தில் நடந்தபோது தோழர் எம். எம். அனிபா மூலம் வழங்கிய நன்கொடை ரூ. 15

கம்பம் தோழர் எஸ். கருத்தக்கண்ணு தம்பி எஸ். ராஜூக்கும் செல்வி சரஸ்வதிக்கும் 21—6—72ல் நடைபெற்ற திருமணத்தின் போது வழங்கிய நன்கொடை ரூ. 20

விராட்டிபத்து தோழர் பாக்கியம்பிள்ளை குமாரர் சிங்காரவேல் பி. காம். க்கும் செல்வி தங்கமணிக்கும் 23—6—72-ல் நடைபெற்ற திருமணத்தின் போது தோழர் எஸ். மன்னர்சாமி மூலம் வழங்கிய நன்கொடை ரூ. 10

பெற்றுக்கொண்டோம்.

—நன்றி.

## வருந்துகிறோம்

"புதுவைப்பகுதியில்நமது கட்சியை ஆரம்பித்த தோழர்களில் ஒருவரான தோழர் கீரைப்பாளையம் இராமச்சந்திரன் ஜூன் 20-ம் நாள் மாலை மறைந்துவிட்டார்என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறோம். அவர் 1946-ஆம் ஆண்டிலிருந்தே கம்யூனிச இயக்கத்தில் தீவிரப்பங்கேற்று பலதியாகங்களைப் புரிந்தவராவர்.

தொழிற்சங்க இயக்கத்திலும் தொடர்ந்து சோடியர் மில்லில் தீவிரப் பங்கேற்றவர். அன்னரது மறைவு கட்சிக்கு மிகப் பெரிய இழப்பாகும் அவரது இறுதி ஊர்வலத்தில்ஆயிரக்கணக்கான தோழர்கள் கலந்துகொண்டு இறுதி மரியாதை செலுத்தினர். இடுகாட்டில் நடந்த அனுதாபக் கூட்டத்தில் தோழர் சக்கரபாணி, ஏரியாகமிட்டி செயலாளர், தோழர் டி, கே. இராமானுஜம், தோழர் கோவிந்தசாமி தலைவர் புதுவை மில்தொழிலாளர் சங்கம் ஆகியோர் அவரது தியாகத்தையும், இயக்கத்தைக் கட்டிக் காத்த திறமையினையும் நினைவு கூர்ந்து பேசினர்.

பல்வேறு தொழிற்சங்கங்களின் சார்பில் மலர் வளையங்கள் வைக்கப்பட்டன. வாழ்க! இராமச்சந்திரன் நாமம்!"

# சி.ஐ.டி.யூ. வேட்பாளர் வெற்றி

## தி. மு. க. - ஐ. என். டி. யூ. சி. கூட்டணிவேட்பாளர் தோல்வி!

### வெற்றி ஊர்வலத்தில் தி. மு. க. வினரின் வெறியாட்டம்

காட்டூர், ஜூன். 28—

29—6—72. இன்றுநடைபெற்ற கோத்தாரிசர்க்கரை ஆலை கூட்டுறவு சங்க டைரக்டர் தேர்தலில் சி. ஐ. டி. யூ. வேட்பாளர் திரு. ஆர். பாலகிருஷ்ணன் வெற்றிபெற்றார். இவரை எதிர்த்து போட்டியிட்டவர் திரு. எஸ். நடராஜன். தி. மு. க., ஐ. என். டி. யூ. சி, கூட்டணி வேட்பாளர் தோல்வி அடைந்தார்

### வெற்றி ஊர்வலம்

வெற்றி பெற்ற திரு. ஆர். பாலகிருஷ்ணனை பாராட்டிவெற்றிஊர்வலம் நடந்தது.

ஊர்வலம் காட்டூர் கடைவீதி செல்லும்பொழுது திமுகவினர் ஊர்வலத்தை தடுத்தார்கள். இது சமயம் திரு பாலகிருஷ்ணனை நோக்கி கல் வீசப்பட்டது

சி. ஐ. டி, யூ. முக்கிய ஊழியரானதிரு, எம் கருப்புசாமியை "களை வெட்டும் கருவியால்", வெட்ட முயற்சித்தனர்.

தி. மு. க. வினரின் இந்த ஜனநாயக விரோத போக்கை கண்டித்து சி ஐ. டி. யூ. நிர்வாகிகள் பேசினர்கள்.

# மார்க்சிஸ்ட் கட்சி மாநாட்டுபிரதிநிதிகள்

### ஆந்திரா

இம்மாநிலத்திலிருந்து 25 பிரதிநிதிகளும் 5 பார்வையாளர்களும் கலந்துகொண்டனர். ஆந்திரத்தில் விவசாயிகளின் போராட்டம் வளர்ந்து வருகிறது. நம்தோழர்களின் தியாக பட்டியலும் வளர்ந்து வருகிறது என்று மாநில செயலாளர்தோழர் அனுமந்தராவ் குறிப்பிட்டார். இந்த இரண்டு வருட காலத்தில் நமதுகட்சியின் ஊழியர்கள் 24 பேர்கள் போலீசாராலும் நிலபிரபுக்களின் குண்டர்களாலும் கொல்லப்பட்டிருக்கின்றனர். இருப்பினும் தற்சமயம் புதிய வேகத்தில் கட்சி நடத்தும் இயக்கங்களில் தொழிலாளர்களும், விவசாயிகளும், மாணவர்களும் பெரும் அளவில் பங்கு கொண்டனர். வந்திருந்த தியாகதழும்பேறிய தோழர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்தோழர்பி. என். ரெட்டி, தோழியர் சுராஜ்யம் ஆகியோராவர். இவர்கள் கம்யூனிச இயக்க வரலாற்றில் வீர காவியத்தை படைத்த தெலிங்கானு போராட்ட புதல்வர்கள். மற்றும் சி ஐ டி யூ செயலர் பிரசாதராவ், தலைவர் சத்ய நாராயணுவும் தொழிலாளர்களும் சளைக்காமல் ஆந்திர மாநிலத்தில் போராட்ட களத்தில் குதிக்கிருர்கள் என்றும் குறிப்பிட்டனர்.

### தமிழ்நாடு

8 ஆயிரம் கட்சி உறுப்பினர்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் முறையில் தமிழகத்தில் இருந்து 40 பிரதிநிதிகளும் 2 பார்வையாளர்களும் கலந்துகொண்டார்கள்.

சில ஆண்டுகளுக்கு முன் நடந்த விவசாயத் தொழிலாளர்களது போராட்டத்திலும், அண்மையில்நடந்த பஞ்சாலைத் தொழிலாளர் போராட்டத்திலும், தோட்டத் தொழிலாளர் போராட்டத்திலும், பீடித் தொழிலாளர் போராட்டத்திலும், சிம்சன் குரூப் தொழிலாளர் போராட்டத்திலும், மின்சாரத் தொழிலாளர் போராட்டத்திலும் மற்றும் பல எண்ணற்ற போராட்டங்களில் கலந்து கொண்ட தோழர்கள் பிரதிநிதிகளாக வந்து பங்கு கொண்டனர்.

இவ்வாறு இந்தியா முழுவதிலிருந்தும் வந்துள்ள பிரதிநிதிகள் கலந்துகொண்டு சென்ற ஆறு நாட்களாக சர்வதேசியப் பிரச்சினைகளைப் பற்றி நடந்த ஆழமான விவாதங்களில் கலந்துகொண்டு எடுத்த முடிவுகள் உலகக் கம்யூனிச இயக்க வரலாற்றில் முக்கிய இடத்தைப் பெறப் போகின்றன.

—நமது சிறப்பு நிருபர்

# வலது கம்யூனிஸ்ட் தலைவரின் பண மோசடி

## போலீஸ் தேடுகிறது

ஆம்பலாப்பட்டு, ஜூன். 28— விவசாயிகளுக்கு கடன் கொடுப்பதாகச் சொல்லி பாங்கில் இருந்த பணத்தை மோசடி செய்திருப்பதாகக் கூறப்படும் வலது கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த கூட்டுறவு கடன் சொசைட்டி தலைவர் ஆர். ஏ. செல்வத்தை போலீஸ் தேடிவருவதாகத்தெரிகிறது.

அவர் ரூ: 18 ஆயிரம் மோசடி செய்திருப்பதாகக் கூறப்படுகிறது.

ஆம்பலாப்பட்டு வடக்கு கிராமத்திலுள்ள கூட்டுறவு கடன் சொசைட்டியிலிருந்து விவசாயிகளுக்குக் கடன் கொடுப்பதாகச் சொல்லி அவர் பணம்வாங்கியதாகவும், பணத்தை விவசாயிகளுக்குக் கொடுக்காமல் மோசடி செய்து விட்டதாகவும் கூறப்படுகிறது.

இதுபற்றி தஞ்சை கூட்டுறவு துணைப் பதிவாளர் போலீசில் புகார் செய்திருப்பதாகவும் போலீசார் வலது கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த ஆர். ஏ. செல்வத்தைத் தேடி வருவதாகவும் கூறப்படுகிறது.

# முட்டை வடிவ வீடுகள்

மாஸ்கோ, ஜூலை. 1— லெனின்கிராடு மனைச் சிற்பிகள், தூர வடக்குப் பிரதேசத்திற்காக முட்டை வடிவ வீடு ஒன்றைப் புனைவரைவு செய்துள்ளனர்.

கான்கிரீட்டால் கட்டப்பெற்ற இந்த வீடு மிகவலுவாக உள்ளது இதில் பயன்படுத்தப்பட்டுள்ளகட்டடச் சாமான்கள் மிக மிகக் குறைவு. இதன் எடை சுமார் 4 டன்கள்.

இதற்கு அஸ்திவாரம் தேவையில்லை. எனவே இந்த வீட்டைச் சதுப்பு நிலத்திலும், பனிப் பிரதேசத்திலும் குறைந்த செலவில் கட்டலாம்.

இந்த வீட்டுக்கான ரெடிமேடு பாகங்களை சாலை, ரயில், கடல், ஆகாய மார்க்கமாகக் கொண்டு செல்லலாம்;

# தாக்குதலைத் தீவிரப்படுத்திய நிக்சனுக்கு வரவேற்பு ஏன்?

## சீன-சோவியத் நிலை பற்றி மதுரை மாநாட்டு தீர்மானம்

வெண்மணி நகர், (மதுரை) ஜூன். 28—

**இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் 9-வது மாநாட்டில், நிக்சனின் பீகிங், மாஸ்கோ விஜயங்கள் பற்றி கீழ்வரும் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.**

வியட்நாம், லாவோஸ், கம்போடியா மக்களுக்கு எதிராக, லட்சக்கணக்கான பேரைக் கொன்று குவிக்கும் நாசகர யுத்தத்தை நடத்திக் கொண்டிருக்கும் ஜனாதிபதி நிக்சனுக்கு, மிகப் பெரிய இரு சோசலிச நாடுகளான சீன மக்கள் குடியரசும், சோவியத் யூனியனும் வரவேற்புக் கொடுத்த முறையைக் கண்டு, உலகம் பூராவிலுமுள்ள, ஜனநாயக, முற்போக்கு எண்ணம் கொண்ட மக்கள் அடைந்த துயரத்திலும் துக்கத்திலும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் 9-வது மாநாடு பங்குபெறுகிறது.

இந்த யுத்தத்தை நடத்தி, முன்னெப்போதும் கண்டிராத நவீனமுறையில் எலக்டிரானிக் யுத்தமுறையையும் (ஆளில்லாமல் இயக்குவிக்கும் முறை — லாசர் கதிர்களை) பயிர்பச்சைகளையும் தண்ணீரையும் விஷமாக்கும் ரசாயனப் பொருள்களையும் நிக்சன் பயன்படுத்தியுள்ளார். உறுதிமிக்க, வியட்நாம் மக்களை அடிபணியச் செய்வதற்கு அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் மேற்கொண்ட திட்டம் தவிடுபொடியாகியுள்ளது வீரமிக்கவியட்நாமியமக்கள், தோல்விக்குமேல்தோல்வியைக் கொடுத்து வருகின்றனர். வியட்நாம் மக்களின் ஈடு இணை காண முடியாத வீரத்தைக்கண்டு உலக மக்கள் வியந்து போற்றுகிறார்கள். வியட்நாம் மக்களின் வீரம், அழியாப் புகழை ஈட்டித் தந்துள்ளது.

யுத்தத்தின் காரணமாக, அமெரிக்க நாட்டின் கோடிக்கணக்கான டாலர்கள் வீணாக்கப்பட்டு, பணவீக்கமும் நெருக்கடியும் ஏற்பட்டு அமெரிக்க பொருளாதாரமேசீர்குலைந்துவிட்டது. அமெரிக்க இளைஞர்கள்உயிரிழப்பது நாளுக்குநாள் பெருகிவருகிறது, இதனால் மக்களுடைய ஆத்திரமும், இதனால் அமெரிக்காவில் யுத்த எதிர்ப்பு உணர்வும், அதிகரித்து, புதிய வேகத்தை எட்டி இன்றைய ஆளும் வர்க்கத்திற்குள் கூர்மையான பிளவு ஏற்பட்டு; யுத்தத்தை முடிவுக்குகொண்டுவர வேண்டும் என்ற பிரச்னை, 1972ம்ஆண்டு நவம்பரில்நடக்கவிருக்கும் ஜனாதிபதித் தேர்தலில், முக்கியத்துவம் பெற்றுவிட்டது.

இதே சந்தர்ப்பத்தில்தான், வியட்நாம் மக்களின் கோபத்திலிருந்து தப்ப ஜனாதிபதி நிக்சன், பீகிங்கிற்கும், மாஸ்கோவிற்கும் வருகைதரும் தன் விருப்பத்தை வெளியிட்டார். பீகிங் வருகையை ''சமாதானத்திற்கான புனிதப் பயணம்'' என்று கூறிய போதுதான் நிக்சன், சோசலிச நாடுகளின் அங்கமான, ஜனநாயக வியட்நாம் குடியரசின் மீது எந்தவிதத் தடையுமில்லாமல்- குண்டுமாரி பொழிவதை ஆரம்பித்தார்.

நிக்சனின், இந்த மிருகத்தனமான, நோக்கம் வெளிப்படையாக தெரிந்த பிறகும் திட்டமிட்டிருந்தபடியே சீன மக்கள் குடியரசின் தலைவர்கள், நிக்சனை வரவேற்றதும் பேச்சுவார்த்தைநடத்தியிருப்பதும்ஆச்சரியகரமானது. நிக்சன் வருகையை ரத்து செய்து, போராடும் வியட்நாம் மக்களோடு சீனா ஒன்றுபட்டு நிற்கவேண்டிய நிர்ப்பந்தமான சூழ்நிலை அப்போதிருந்தது.

சீனாவைக் கட்டுப்படுத்துவது என்ற அமெரிக்க ஏகாதிபத்தியத்தின்கொள்கை, நிக்சனின் பீகிங் வருகைக்குப்பிறகு, வெளியிடப்பட்ட சௌ-நிக்சன் கூட்டறிக்கையால், தவிடுபொடியாக்கப்பட்டாலும், வியட்நாமை பொறுத்தவரையில் நிக்சன் ஒரு அங்குலம்கூட விட்டுக் கொடுக்கவில்லை என்பது உண்மை.

வியட்நாம்பற்றிய சீனாவின் நிலையை, சூ-என்-லாய் உறுதிப்படுத்தியது உண்மையேயானாலும் வியட்நாம் ஜனநாயகக் குடியரசின் மீது பொழிந்த அமெரிக்க குண்டு வீச்சைக் கண்டிக்காததுமட்டுமல்லாமல் அதை எதிர்த்துக்கூட ஒரு வார்த்தை இல்லாமல் கூட்டறிக்கை உள்ளது. இதை வேதனையோடு குறிப்பிட்டேயாக வேண்டியுள்ளது,

### மாஸ்கோ விஜயம்

இதே நோக்கத்தோடுதான், இரண்டு மாதங்களுக்குப் பின்னர், நிக்சன் தன்னுடைய மாஸ்கோ விஜயத்தைத் துவங்கினார். இந்த சந்தர்ப்பத்தில்தான் வியட்நாமின் பொம்மைத் துருப்புகளுக்கு தோல்விமேல் தோல்வி ஏற்படுவதைக் கண்டு, ஜனநாயக வியட்நாம் குடியரசின் மீதும் தென்வியட்நாம் மீதும், மின் அணுகுண்டுகளைப் பொழிந்தும், ஜனநாயக வியட்நாம் குடியரசின் கடற்கரையில், ஆணவத்தோடு கண்ணிவெடிகளை வைத்தும் சோவியத் யூனியனிலிருந்து மற்ற சோசலிசநாடுகளிலிருந்தும் எந்தவித உதவி வருவதையும் நிக்சன் தடுத்தார்,

வியட்நாம் ஜனநாயகக் குடியரசுடன் சோவியத் யூனியன் வைத்திருக்கும் வியாபார உரிமைக்கு இது ஒரு சவாலாகும். இது எல்லா சோசலிச நாடுகளுக்கும் மற்ற நாடுகளுக்கும் விடப்பட்ட சவாலாகும்.

இந்த சவாலை சோவியத் யூனியனின் தலைவர்கள், ஏற்றுக்கொள்ளாதது மட்டுமல்ல அந்தக் கொலைகாரர நிக்சனைவரவேற்று,திட்டப்படிநிகழ்ச்சிகளையும்செய்தனர். குறைந்தபட்சம், அவர்கள், நிக்சனின் விஜயத்தை ரத்து செய்து விட்டு, அவருடன் பேச்சு நடத்த மறுத்திருக்கவாவதுவேண்டும். பிரஸ்னேவ்—நிக்சன் கூட்டறிக்கையில், அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் இந்த கடல்கொள்ளைச் செயல்களைக் கண்டித்து ஒருவார்த்தைகூட இல்லாததும் வேதனைக்குரியது. இவ்வளவுக்கும் மேல் நிக்சன்—பிரஸ்னேவ் கூட்டறிக்கையில், சர்வதேச சமத்துவமும் பிறநாட்டு உள்விவகாரங்களில், தலையிடாக் கொள்கையும் பற்றிக் குறிப்பிடப்பட்டிருப்பது கேலிக்குரியதாகும்.

வியட்நாம் மக்களுக்கு, சோசலிச நாடுகளிலிருந்து குறிப்பாக, சோவியத், சீன நாட்டிலிருந்து கிடைக்கும் அபரிமிதமான யுத்த தளவாடங்கள், மற்றும் உதவிகள் கிடைப்பதைக் குறிப்பிட்டு இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) பர்த்துவானில் நடத்திய பிளீனம் கூட்டம் குறிப்பிட்டது அத்துடன் கருத்துவேறுபாடுகளுக்கு இடையிலும், ஒரு கூட்டணியை ஏற்படுத்த முடியாத அளவுக்கு சோசலிச முகாம் பிளவு பட்டிருப்பதையும் அது சுட்டிக்காட்டியது இதனால் அமெரிக்க ஆக்ரமிப்பை தோல்வியுறச் செய்யும் பணியில் மிகப் பெரிய வல்லரசை எதிர்த்து, வியட்நாம் மக்கள் தன்னந்தனியாகப் போராட வேண்டிய நிலையில் இருக்கிறார்கள் என்றும் குறிப்பிட்டது.

சோசலிச முகாமில் இருக்கும்பிளவினாலும், சோவியத் யூனியனும் சீனாவும் ஒருவரைஒருவர், நம்பிக்கையின்மையோடும், விரோதத்தோடும் பழகுவதாலும், ஏகாதிபத்தியத்திற்குள் இருக்கும் முரண்பாடுகளை,சோசலிச முகாம் பயன்படுத்திக்கொள்வதற்குப் பதிலாகவும், தாங்க முடியாது அடிகளை ஏகாதிபத்தியத்திற்குக் கொடுப்பதற்குப் பதிலாகவும் அமெரிக்க ஏகாதிபத்தியம், இந்த வேற்றுமைகளை, தங்களுடைய சுயநலன்களுக்காக உபயோகப் படுத்த முடிகிறது,

அமெரிக்க ராணுவ கேந்திரத்தில் (பெண்டகனில்) தஸ்தாவேஜுகள் சமீபத்தில் வெளியிடப்பட்ட போது1964 மார்ச் 20ந்தேதி,ஜனாதிபதிஜான்சன் தூதுவர் காபட்லாஜுக்குஒரு தந்தியில் சீனாவுக்கும்சோவியத்யூனியனுக்கும், கூடியவிரைவில் ஒரு மோதல் ஏற்படும்என்று எதிர்பார்க்கிறோம். அதையால் வடவியட்நாமுக்குஎதிராக எந்த நடவடிக்கையையும், அந்த மோதலுக்குப்பிறகுதான் சரியாக இருக்கும் என்று குறிப்பிட்டிருந்தார்,

பீகிங்கிற்கும், மாஸ்கோவிற்கும் நிக்சன் புறப்படுவதற்கு முன்பும், பிறகும் நடந்த நிகழ்ச்சிகள், நாம் பார்துவானில் கூறியதை உறுதிப்படுத்தியது.

புரட்சி ஒரு நாட்டிற்குள் ஏற்றுமதி செய்யப் பட முடியாது. ஆனால் அதே சமயத்தில் ஏகாதிபத்தியவாதிகளால், எதிர்ப்புரட்சி ஒரு நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப்பட்டால் அவர்கள் சும்மாயிருக்காமல் உடனே தலையிட்டு சரியான பதிலடி கொடுப்பார்கள் என்று சோசலிச நாடுகளிலுள்ள கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள்— குறிப்பாக சோவியத் யூனியன், சீனத் தலைவர்கள் மீண்டும் மீண்டும் அறிவிக்கிறார்கள்.

ஆனால் அமெரிக்க ஏகாதிபத்தியம் வெளிப்படையாக எதிர்ப்புரட்சியை ஏற்றுமதி செய்துள்ள நிலையை இன்று நாம் பார்க்கிறோம் சோசலிச முகாமிலுள்ள ஒரு நாடான வியட்நாம் ஜனநாயகக் குடியரசின் மீது அமெரிக்க ஏகாதிபத்தியம் மிகவும் நீசத்தனமான ஓர் ஆக்கிரமிப்பு நடவடிக்கையை மேற்கொண்டுள்ளது.

அமெரிக்க ஆக்கிரமிப்பாளர்களுக்குத் தோல்வி கொடுக்க அவர்களுடைய சவாலை ஏற்றுக் கொள்ள, நிர்பந்திக்கும் இந்தச் சூழ்நிலையில், சோவியத் நாடும், சீனமும் ஒன்றுபட்டு செயல்படவேண்டும். அமெரிக்க ஏகாதிபத்தியத்தோடு, பல விஷயங்களில் தனித்தனியே, ஒத்துப்போகும் இந்த இருநாடுகளுக்கும், வியட்நாமைப் பாதுகாக்கவும் அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் சவாலை ஏற்கவும் தங்களுக்குள், ஒத்துப்போக முடியவில்லை என்பதைப் புரிந்து கொள்ளமுடியவில்லை.

கொள்ளை அமெரிக்க ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நடக்கும் இந்த யுத்தத்தில், சக்தியுடன் நேரடியாக தலையிட்டு வியட்நாம் மண்ணிலிருந்து ஆக்கிரமிப்பாளர்களை வெளியேற்ற சோவியத் யூனியனும், சீனமும் தங்களுக்கிடையேயுள்ள கருத்து வேறுபாடுகளை மறந்து நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று, பாட்டாளிவர்க்க சர்வதேசியத்தின் பேரால்—வியட்நாம் மக்கள் இதுவரை செய்துள்ள மகத்தான தியாகத்தின் புனிதமான நினைவின்பேரால் — மக்கள் முன்னணியைக் கட்டுவதற்காக. தங்களின் சுதந்திரத்தைக் காப்பதற்காக வியட்நாம் மக்கள் தற்போது அனுபவித்துக் கொண்டிருக்கும்சொல்லொண்ணாஇன்னல்களின் பேரால்—இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் 9-வது மாநாடு சோவியத் யூனியனுக்கும், சீனத்திற்கும் அறைகூவல் விடுக்கிறது

இந்தக் கோரிக்கையை சீன, சோவியத் தலைவர்களிடம் வலியுறுத்துமாறு உலகிலுள்ள எல்லா கம்யூனிஸ்ட்களுக்கும், எல்லா ஜனநாயகவாதிகளுக்கும், உலக முழுவதிலுமுள்ள சுதந்திரத்தை விரும்பும் எல்லா மக்களுக்கும் இம்மாநாடு அறைகூவல் விடுக்கிறது.

---

# 3 லட்சம்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பின்னர் கட்சியின் பொதுச் செயலாளர் தோழர் சுந்தரய்யா பேசும் போது குறிப்பிட்டதாவது:

கட்சி மாநாட்டின் இந்த கடைசிநாள் அணிவகுப்பில் பல்லாயிரக்கணக்கில் கூடியிருக்கும் மக்களுக்கு முதலில் கட்சியின் சார்பில் வாழ்த்தும் நன்றியும் தெரிவிக்கிறேன்.

### வியட்நாம் மக்கள் வழியில்

கடந்த 30 ஆண்டுகளாக வியட்நாம் மக்கள் உலகையே பிரமிக்கவைக்கும் வீரப்போராட்டத்தை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். அந்த வியட்நாம் மக்கள், தலைவர் ஹோசிமினால் வழிகாட்டப்பட்டு உணர்வூட்டப்பட்டவர்கள். அந்த மக்களுக்கு நாம் வாழ்த்துத்தெரிவிப்பதுடன் அவர்களைப்போல் எந்தத் தியாகமும் செய்ய அர்ப்பணித்துக் கொண்டு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி இந்திய மக்களின் நல்வாழ்வுக்குப் போராட உறுதி பூண்டுள்ளது.

எங்கள் மீது நம்பிக்கை வைத்து 1967-ல் கேரளத்திலும், மேற்கு வங்கத்திலும் மக்கள் மார்க்சிஸ்ட் கட்சியை அதிகாரத்தில் அமர்த்தினர்.

அப்போது இந்த இரு மாநிலங்களிலும் அமைந்த ஐ. மு. அரசுகள் காங்கிரஸ் கொள்கைக்கு மாறுபட்ட கொள்கைகளைப் பின்பற்றின. உழைக்கும் மக்களின் போராட்டங்களை நசுக்குவதற்கு போலீசை அனுப்ப அந்த அரசுகள் மறுத்தன. இந்நிலையில் காங்கிரஸ் கொள்கைகளுக்கு மாறுபட்ட கொள்கைகளைப் பின்பற்றியதால் மேற்கு வங்க, கேரள ஐ மு. அரசுகளை இந்திரா அரசு கவிழ்த்தது.

வலது கம்யூனிஸ்ட் கட்சி போன்ற கட்சிகளின் துரோகத்தினால் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை அமைச்சரவையிலிருந்து இந்திரா அரசினால் நீக்க முடிந்தாலும் மக்களிடமிருந்து அகற்ற முடியவில்லை.

மக்களுடைய போராட்டங்களில் பங்கு கொண்டு அவர்களின் அன்புக்குப் பாத்திரமாகி அதன் பலம் முன்னைவிடப் பெருகியுள்ளது.

இந்நிலையில் மேற்கு வங்கத்தில் பாசிஸ்ட் போக்கிலான அடக்கு முறையை இந்திரா காங்கிரஸ் ஏவிவிட்டுள்ளது. ஜூன் மாதம் வரை மார்க்சிஸ்ட் கட்சியைச் சேர்ந்த ஊழியர்கள் 656 பேர் படுகொலை செய்யப்பட்டு உள்ளனர். இவர்களில் பெண்கள் மட்டும் 11 பேர் இந்த அடக்குமுறையாலும் மார்க்சிஸ்ட் கட்சியைத் தோற்கடிக்க முடியாது என்று கண்டதும் மேற்கு வங்கத்தில் இந்திரா காங்கிரஸ் அரசு தேர்தலையே மோசடி செய்துள்ளது.

### வங்க மக்களுடன் தமிழ் மக்கள்

தேர்தல் முடிந்த பின்னரும் 40 ஆயிரம் மக்கள் வீடுகளிலிருந்து — வீட்டை விட்டு வெளியேற்றப்பட்டிருக்கின்றனர்.

நாட்டில் ஒரு கட்சி சர்வாதிகாரத்தை அமைக்கும் இந்திரா அரசின் நடவடிக்கையை எதிர்த்து சகல ஜனநாயக சக்திகளும் ஒன்றுபட்டுப் போராட வேண்டும் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவல் விடுக்கிறது.

காங்கிரசின் ஒரு கட்சி சர்வாதிகாரத்தை அமைக்கும் இந்த அபாயத்தை எதிர்த்துப் போராட எத்தனை சிரமங்கள் கஷ்டங்கள் வந்தாலும் அவற்றை துச்சமாக மதித்துப்போராட மார்க்சிஸ்ட் கட்சி உறுதி பூண்டுள்ளது.

மேற்கு வங்க மக்களும், கேரள மக்களும், தமிழக மக்களும் மற்ற மாநில மக்களும் இந்தப் போராட்டத்தில் சேர்ந்து வருகின்றனர்.

இன்று இங்கு கூடியுள்ள இந்தப் பிரும்மாண்டமான ஊர்வலமும் பொதுக் கூட்டமும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தான் புதிய நம்பிக்கையை ஏற்படுத்தும் என்ற விதத்தில் அமைந்துள்ளது.

---

(8ம்- பத்தி தொடர்ச்சி)

### களிலும், பஸ்களிலும்டாக்சிகளிலும்

மக்கள் உரிமைக் கோஷகள் முழங்கி வந்த காட்சி மதுரை நகரம் இதுவரை கண்டும் கேட்டிராத காட்சியாகும்.

(விபரம் பின்னர் வெளிவரும்)—

மாலை சரியாக மூன்று மணிக்கு மதுரை அரசரடி மைதானத்தில்அதிர்வேட்டுகளுடன் புறப்பட்ட ஊர்வலம், ரேஸ்கோர்ஸ் மைதானத்தை இரவு 9 மணிக்கு அடைந்தது. ரேஸ்கோர்ஸ் மைதானமெங்கும் ஒரே மக்கள் பெருவெள்ளமாக காட்சியளித்தது.

மூன்று லட்சத்திற்குமேல் திரண்டிருந்த அந்த பிரும்மாண்டமான கூட்டத்திற்கு தோழர் பி. ராமமூர்த்தி தலைமை வகித்தார். தோழர் பி. சுந்தரய்யா, இ. எம். எஸ். பி. டி. ரணதிவே, ஜோதி பாசு ஆகியோர் பேசினர்.

(விபரம் பின்னர்)

---

- விவசாயத் தொழிலாளர்களுக்கு கூலி நிர்ணயம் செய்க
- 5 ஏக்கர் வரையுள்ளவர்களுக்கு மின் கட்டணத்தை குறைத்திடுக
- விவசாயிகளுக்கு கடன் நிவாரணம் வழங்குக
- விவசாய உற்பத்திப் பொருள்களுக்கு விலைப்பாதுகாப்பு தருக

# ஜுலை 12ல் ஆர்ப்பாட்டம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

அளிக்கப்பட்டிருக்கும் மற்றொரு பெருஞ் சலுகையாகும் இந்தச் சலுகைகளை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி முற்றாக எதிர்க்கிறது,

விவசாய வருமானத்தின் மீது படிப்படியாக உயர்ந்து கொண்டுபோகும் வருமான வரி விதிக்க வேண்டும்என்றும், 5 ஏக்கருக்கு மேல் நிலம் வைத்திருப்பவர்களுக்கு படிப்படியாக உயர்ந்துகொண்டு போகும் மின் கட்டணம் விதிக்கப்படவேண்டும்என்றும்மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கோருகிறது.

மத்திய அரசில் வீற்றிருக்கும் இந்திரா காங்கிரஸ், மின்சார கட்டணத்தை அதிகரிக்கு மாறும் விவசாயவர்க்கத்தின்மீது வரிச்சுமையை அதிகரிக்குமாறும் மாநில அரசாங்கங்களை திரும்பத்திரும்ப கேட்டு வரும்போது, அதிகாரத்தில் இல்லாத இந்தமாநிலத்தில் இந்திரா காங்கிரஸ் போராட்டத்தில் சேர்ந்திருப்பதில் முக்கியத்துவம் இல்லாமலில்லை. ஏழை மக்களின் லட்சியத்துக்காக நிற்பதாகக்கூறிக் கொள்ளும் வலது கம்யூனிஸ்ட் கட்சி இந்தக் கிளர்ச்சியில் சேர முன் வந்திருப்பது ஆச்சரியமளிப்பதாகும். இந்தக் கிளர்ச்சியின் நோக்கம் நிலப்பிரபுத்துவப் பிரிவினரின் நலன்களைக் காப்பதற்கானதுதான் என்று செயல் கமிட்டி கடைசியாக நிறைவேற்றியுள்ள தீர்மானம் தெளிவுபடுத்தியுள்ளது. சிண்டிகேட்டுக்கும்,சுதந்திராகட்சிக்கும் எதிராக வாய்கிழியப் பேசும் இந்தக் கட்சி நிலப்பிரபுத்துவ நலன்களைப் மேம்படுத்துவதற்கான இப் போராட்டத்தில் சேர்ந்திருப்பது விநோதமானதாகும்.

1972 ஜுலை 15க்குள் அரசாங்கம் இணங்காவிட்டால் கீழ்க்கண்ட கோரிக்கைகளுக்காக நீடித்த போராட்டம் நடத்துவதற்கு ஆயத்தம் செய்யுமாறு எல்லா உறுப்புகளையும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவி அழைக்கிறது.

1) மாநிலம் முழுவதும் எல்லா விவசாயத் தொழிலாளர்களுக்கும் நாள் ஒன்றுக்கு ரூ 5 வீதம் குறைந்தபட்சக் கூலி நிர்ணயிக்க வேண்டும்.

2) 5 ஏக்கருக்கும் அதற்குக் குறைவாகவும் நிலம் வைத்திருக்கும் விவசாயிகளுக்கு யூனிட்டுக்கு 9காசு வீதம் மின்சாரக் கட்டணத்தை நிர்ணயிக்கவேண்டும்.

3) அரசாங்க, கூட்டுறவு நிறுவனங்களாக இருந்தாலும் தனியார் லேவாதேவிக்காரர்களாக இருந்தாலும் எல்லா கடன்களையும் நிறுத்திவைக்க வேண்டும். 10 ஏக்கருக்குக் குறைவாக நிலம் வைத்திருப்பவர்களுக்கு கடன்களைக் குறைத்து கடன் நிவாரணம் அளிக்க வேண்டும்.

(4) பணப்பயிர்களுக்கு விலைப்பாதுகாப்பு நிர்ணயிக்கக் கோரி இந்திய அரசாங்கத்தை வற்புறுத்த வேண்டும்,

பெரு நிலப் பிரபுக்களின் போராட்டத்திலிருந்து விடுபடுமாறும், விவசாயத் தொழிலாளர்கள், ஏழை, நடுத்தர விவசாயிகளின் கோரிக்கைகளை அடைய கிளர்ச்சியும்போராட்டமும் நடத்தளங்களுடன் சேருமாறும் வலது கம்யூனிஸ்ட் கட்சியை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கேட்டுக் கொள்ளுகிறது. இத்தகைய போராட்டத்துக்கு அவர்கள் நம்முடன் சேரத் தயாராக இருந்தால் மேலும் கூட்டாக இப்போராட்டத்தை நடத்துவதற்கான முறைகளைப்பற்றி விவாதிக்க மார்க்சிஸ்ட் கட்சி தயாராக இருக்கிறது.

சமீப கிளர்ச்சியில் கலந்து கொண்ட விவசாயிகள்மீது கட்டவிழ்த்து விடப்பட்டிருக்கும் கடுமையான அடக்குமுறையையும் அவர்கள்மீது கிரிமினல் திருத்தச் சட்டம் பிரயோகிக்கப்பட்டிருப்பதையும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கண்டிக்கிறது. விசாரணைக் கைதிகளாக இருந்தாலும் சரி; தண்டிக்கப்பட்ட கைதிகளாக இருந்தாலும் சரி — சிறையில் அடைக்கப்பட்டிருக்கும் அனைவரையும் விடுதலை செய்யுமாறும், எல்லா வழக்குகளையும் திரும்பப் பெறுமாறும் அது கோருகிறது.

---

# 2 லட்சம் பேர் அணிவகுப்பு...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

நிதிகள் தோழர்கள் அரிகிஷன் சிங் சுர்ஜித் எம், ஆர். வெங்கட்ராமன், பிரசாதராவ் ஆகியோர் தலைமையில் பாரத நாட்டின் 18 மொழிகளிலும் மார்க்சிஸ்ட் கட்சியின் உரிமை கோஷங்களை முழங்கிவர—

மதுரை நகரம், மாவட்டம் எங்குமிருந்து பல்வேறு கம்யூனிஸ்ட் கட்சி கிளைகள் மன்றங்களின் சார்பில் (விபரம் பின்னால்) ஆண்களும் பெண்களும் தாய்மார்களும் குழந்தைகளும் செங்கொடிகளாலும், மன்றங்களின் பெயர்களாலும் அலங்கரிக்கப்பட்ட நூற்றுக்கணக்கான சைக்கிள் ரிக்சாக்களில் கோஷங்கள் முழங்கிவர—

அவைகளுக்குப் பின்னால் மதுரை மாவட்டத்தின் பல்வேறு தாலுகாக்களிலிருந்தும் வந்த நூற்றுக்கணக்கான டயர் வண்டிகளும் மாட்டு வண்டிகளும் இந்திரா காங்கிரசின் அடக்குமுறைகளையும், விதித்து வரும் வரிக் கொடுமைகளையும்—விளக்கிய கார்ட்டூன்களைத் தாங்கியும்—

அதே பாணியில் செல்லும் தி. மு. க. வின் அடக்குமுறைகளைக் கண்டனம் செய்யும் கார்ட்டூன் காட்சிகளையும், கார்ட்டூன்களையும் தாங்கி அணிவகுத்து வந்த தோழர்கள் கோஷமிட்டு வந்த பாணி— கட்டுப்பாடு மிகுந்த ஒரு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மகத்தான காட்சிகளாக விளங்கியது.

### நாடகக் காட்சி

ஓரிடத்தில் முதலாளி பட்டியல் வைத்துக் கொண்டு சில தொழிலாளிகளை அடி உதை என்று உத்தரவிட— போலீஸ் வேடமணிந்த தொழிலாளி வேடமணிந்த சிலர் மீது பாய்ந்து சென்று தாக்கிட— தாக்குண்ட அந்தத் தொழிலாளிகள் தங்களின் உரிமை முழக்கங்களை மேலும் வேகத்துடன் முழங்கி ஊர்வலம் முழுவதும் நடித்துவந்த காட்சி என்றும் மறக்க முடியாத காட்சியாக அமைந்தது.

ஆயிரக் கணக்கில் பெண்களும் சிறுவர்களும் பல்வேறு பகுதிகளாக ஊர்வலத்தில் கலந்து கொண்டு போடாதே— போடாதே பொல்லாத வரிகள் போடாதே— இந்திரா காந்தி பெரியக்கா இந்த அடக்குமுறையை நிறுத்தக்கா என்றும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வாழ்க!— புரட்சி ஓங்குக என்றும் இனிமைக் குரலில் அவர்கள் முழங்கிவந்த முழக்கங்கள் மதுரைதெருக்களின் இருமருங்கிலும் நின்று கேட்டோருக்கு எழுச்சிமிக்க ஊக்கம் அளித்தன.

### செந்தொண்டர் படை

சிகப்புச் சட்டையணிந்து, பல்லாயிரக்கணக்கான செந்தொண்டர்கள் கை வீசி மிடுக்குநடையுடன் முன் செல்ல-செஞ்சட்டை சிகப்புச் சேலையணிந்து பெண்களும் நடந்துவர இளம்சிறுவர்களும் அதே பாணியில் பாலர் செம்படையாக ஆர்ப்பரித்து— செந்தொண்டர் படை அணிவகுத்துச் சென்ற காட்சியே காட்சி.

இதன் பிறகு எண்ணற்ற தொழிற்சங்கங்கள், தங்களுடைய பாணர்கள் கொடிகளுடன் — வெள்ளை மாளிகை கொள்ளைக்காரா வியட்நாமை விட்டு வெளியே போடா—

இறந்த தோழர்கள் எழு நூறு—இன்னும் சிறையில் பல நூறு...பெண்கள் கற்பின் கண்ணீரு...இதுதான் பெங்கால் வரலாறு— —இந்திரா காந்தி சர்க்காரோ, எரிமலை மீது நிற்காதே என்றும்

### உணர்ச்சி மிகு கோஷங்கள்

வலமே வலமே கேவலமே —வலதின் மறுபெயர் சுயநலமே என்றும்முழங்கி வந்த முழக்கங்கள் மதுரை நகரின் எல்லா இடத்திலும் எதிரொலித்தன.

நிலப்பிரபுத்துவக் கொடுமையையும்—அதனைப் பாதுகாக்கும் அரசையும் கண்டிக்கும் வகையில் ஆயிரக் கணக்கான தோழர்கள்

''வெண்மனியில்
மாண்டோர்
மீண்டும் வருகிறோம்
நெஞ்சில் தியாகக் கனலை
ஏந்தி வருகிறோம''

என்று முழங்கி வந்தது - வீரத்தியாகிகளேமீண்டும் உயிர்பெற்று, அன்று கண்ணகி பாண்டிய மன்னனிடம் நீதி கேட்க மூன்வந்தது போல்இருந்தது இந்த வீர உணர்ச்சிமிக்க கோஷங்கள்.

### மேடையிட்ட லாரியில் தலைவர்கள்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் தங்களின் கொடிகள், பாதகைகளுடன் அணிவகுத்து கோஷமிட்டு முழங்கி வந்தனர். மக்கள் செங்கொடி பாட்ஜிகள், கொடிகள் பானருடன்பல்லாயிரக் கணக்கில் சூழ்ந்துவர அலங்கரிக்கப்பட்ட உயரமான மேடையிட்ட லாரியில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் **தோழர்சுந்தரய்யா** மற்றும் தோழர்கள் **பி. டி ரணதிவே, இ. எம். எஸ். பி.ராமமூர்த்தி, ஜோதிபாசு, பசவ புன்னையா, ஏ. கே. கோபாலன், ஆகிய தலைவர்களும் ஏனைய** மத்திய கமிட்டி உறுப்பினர்களும் அமர்ந்திருந்தனர். மதுரை நகரின் வீதிகளின் இருமருங்களிலும் மக்கள் நின்று வாழ்த்துக்கரகோஷமெழுப்பி சுந்தரய்யாவாழ்க பி. ராமமூர்த்தி வாழ்க! ஏ. கே. கோபாலன் வாழ்க! பி. டி, ரணதிவே வாழ்க! ஈ, எம்,எஸ். வாழ்க! ஜோதி பாசு வாழ்க! என்று வாழ்த்திய காட்சி கண்கொள்ளாக் காட்சியாக விளங்கியது,

### பெருவெள்ளம் மக்கள்

அதன் பின்னர் நீண்டதொரு ஜனத்திரள் கொடிகளுடனும், பானர்களுடனும், கோஷங்கள் முழங்கிவர— **600 லாரி**

(2ம்- பத்தி பார்க்க)

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில்(13-முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர், ஆசிரியர்: கே முத்தையா